உ

நான்காவது ஆண்டுநிறைவு

அறிக்கைப்பத்திரம்.

---

ஆனந்த—இராக்கத௵



# கரந்தைத் தமிழ்ச்சங்கம்.

(பதிவுசெய்யப்பெற்றது.)



தஞ்சை.

---

விரோதிகிருது௵
வைகாசி௴ ௧௪
நிறுவப்பெற்றது.

---

TRICHINOPOLY.
S. GEORGE & CO., PRINTERS.
1915.

# THE KARANTHAI TAMIL SANGAM,

## *TANJORE.*

*Registered under Act XXI of 1860 of the Governor-General of India in Council.*

**Founded on the 14th May, 1911.**

OBJECTS.

1. To advance and improve the cause and condition of Tamil and Tamilians.
2. To promote friendly and social intercourse among the members.
3. To maintain the Charitable Institutions of the Tamilians.
4. To afford, as far as practicable, facilities for the physical, moral, social and mental improvement of the members.
5. To help the industrial and economic advancement of the Tamilians.

These objects are to be attained by organising lectures and debates, maintaining reading rooms and libraries, holding tuition classes, publishing books, magazines and tracts, carrying on original researches, establishing Industrial and Technical Institutions, Tamil Schools and Colleges, undertaking Translations from other languages and production of original works on Sciences, management of Charitable and Educational Institutions and Trusts entrusted to the Sangam, holding conferences etc. etc.

All interested in the cause are welcome to become Members.

# கரந்தைத் தமிழ்ச் சங்கம்.

(பதிவுசெய்யப்பெற்றது.)

தஞ்சை.

---

## நான்காவது ஆண்டு நிறைவு அறிக்கைப் பத்திரம்.

---

ஆனந்த—இராக்கத௵.

---

எல்லாம் வல்ல இறைவன் திருவருட் பெருக்கால் எமது நான்காவதாண்டு அறிக்கைப் பத்திரத்தை இப்பேரவையின்கண் வெளியிடுகின்றோம்.

### மூன்றாவது ஆண்டுநிறைவுத் திருவிழா.

இவ்வைபவம் சென்ற ஆனந்த௵ ஆவணி௴ ௬, ௭ தேதிகளில் ஸ்ரீமான் தோட்டக்காடு இராமகிருஷ்ண பிள்ளை, B. A., F. M. U., F. R. H. S., அவர்களின் விழுமிய தலைமையின்கீழ் மிகச் சிறப்புடன்

நடந்தேறியது. விழா நிகழ்ந்த இரண்டு தினங்களி லும் ஆண்டுப் போந்து பொழிந்த பெரியார் பிரசங்க வெள்ளத்தினை உண்டு மடுக்கக் கூடினர் மிகப்பலர். அப்பொழுது கீழ்க்கண்ட பிரசங்கங்கள் நடை பெற்றன:—

க. பெண்கல்வியினலாம் பயன் } ஸ்ரீமதி கிருஷ்ண வேணி அம்மாள் அவர்கள், சென்னை

உ. தமிழ் }

ங. கம்பராமாயணம்—கனம் ஸ்ரீநிவாசலு நாயுடு அவர்கள், பட்டீச்சுரம்.

ச. பொருளதிகாரவிளக்கம்-கனம் அ. கோபாலையர் அவர்கள், கோனுப்பட்டு.

ரு. பாஷாபிமானம்—கனம் அ. பாலசுப்பிரமணிய பிள்ளை அவர்கள், கும்பகோணம்.

சா. வேளிர் வரலாறு—கனம் ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள், திரிசிரபுரம்.

எ. புலனெறிவழக்கம்—கனம் அ. கந்தசாமி பிள்ளை அவர்கள், காட்டுப்புத்தூர்.

அ. அணியும் நாகரீகமும்—கனம் ஐ. சாமிநாத முதலியார் அவர்கள், மன்னார்குடி.

ஸ்ரீமான் இராமகிருஷ்ண பிள்ளை அவர்களுடைய உபந்நியாசம் கேட்டார்ப் பிணிக்கும் தகையதாய்க்

கேளாரும் வேட்பச் சுவைமல்கியது. இன்னும், அன்றுப் பிரசங்கித்த பெரும்புலவர்கள் மாறு வள்ளன்மையோடு வாரிவாரி யுதவிய கல்விப் பொருட்பேறு பெற்று ஆனந்த வெள்ளத்து ஆழ்ந்தார் பலர்.

அங்கத்தினர்.

சென்ற வாண்டினிறுதியில் நம் சங்கத்தின் அங்கத்தினராகவிருந்தார் அறுபத்தொருவர். இவ்வாண்டில் நம் சங்கத்தின் நலங்கண்டு கூடினுர் ஒன்று தலையிட்ட நாற்பதின்மராவர். இவ்வாண்டிற் சங்க நீங்கினுர் ஒருவர் போக ஆண்டிறுதியிற் சங்கமிருந்தார் ஒன்று கூடிய நூற்றுவராவர். (அனுபந்தம் க.) எனவே, இவ்வாண்டில் நம் உறுப்பினர் தொகை ஏறக்குறைய நூற்றிற்கு அறுபத்தாறு பங்கு பெருகியதென்பது விளங்கும். இதுகண்டு தமிழுலகு களிக்கற்பாற்று.

கூட்டங்கள்.

வழக்கம்போலவே பெரியபுராண ஆராய்ச்சி இவ்வருடமும் நடந்துவந்தது. ஆனுல் இச்சபைகட்கு உள்ளூரில் வதிதரும் அங்கத்தினர் பலர் கூட்டம் நிகழப்பெறுமாறின்மையால் இவ்வழியில் நம் சங்கத்தின் வேலை சற்றுக்குறைவுற்றது. ஆயினும், வழக்கம்போலவே எம்பால் உழுவலன்புகாட்டியுதவி வரும் அருந்தமிழ் வள்ளல்களாகிய சீமான் சிவ.

சோலைமுத்துப்பிள்ளை அவர்கள், ஸ்ரீமான் இராமசாமி வன்னியர் அவர்கள், ஸ்ரீமான் சோக்கலிங்கம்பிள்ளை அவர்களாதிய வித்துவான்களுக்கு சங்கத்தாரின் வந்தனம் உரியதாகும். இவ்வாண்டில் நடந்த புராணப்பிரசங்கங்கள் 33. ஆராய்ச்சி நிகழ்ந்த பாசுரங்கள் 1019.

இவைகளையன்றிப் பிரபலபொதுசனக்கூட்டம் இரண்டும், காரிய நிருவாகசபைக்கூட்டம் பதினேழும், சர்வ சங்கத்தினர் காரியாலோசனைக் கூட்டம் மூன்றுமாக இவ்வாண்டில் நிகழ்ந்த கூட்டங்கள் 55.

## புத்தகசாலை—கரந்தைத் தமிழ்ச்சங்கக் கலாநிலையம்.

நம் புத்தகசாலை நாளும் வளர்ந்துவருவது அருந்தமிழன்பர்களுக்கு அளவிலின்பம் பயப்பதாகும். பாஷாஞானம் மல்குவிக்கத்தக்க இலக்கணவிலக்கிய நூற்களும், சரிதவாராய்ச்சியும், பாஷாதத்துவப் பயிற்சியும், மேனாட்டுச் சரித்திர விசாரணையும் நிகழ்த்தவல்ல அநேகம் சிறந்த ஆங்கில கிரந்தங்கள் நம்நிலையத்து அரிதிற்றேடிச்சேர்க்கப்பெற்றன. இத்தகைய புத்தகசாலைகள் தஞ்சையில் பல இல்லாக் குறையினை ஒருவாறு நீக்கவேண்டி நம் சங்கத்து அங்கத்தினரல்லாதாரும் இதில் தனியே சந்தாதாரராகும் உரிமையையும் கொடுத்திருக்கிறோம். அருந்தமிழன்பர் இவ்வுரிமையினை நெகிழவிடாது அதனை

லெய்தப்பெறும் பயனை அடைவார்களென்று நம்புகிறோம். சென்றவாண்டினிறுதியில் நிலையத்திருந்த நூற்றொகை 243; இவ்வாண்டில் சேர்க்கப்பெற்றன 196; ஆக இப்பொழுதுள்ள நூற்கள் 439. புதிதாய்ச் சேர்ந்த 196 புத்தகங்களுள் 176 அருந்தமிழ்ச்சீரியரால் உதவப்பெற்றன. இவர்களின் விவரம் இரண்டாவது அனுபந்தத்திற்காண்க. இப்பெரியார் வள்ளன்மை தமிழுலகு வியந்தேத்திக்கொண்டாடவல்லது. மதுரைத் தமிழ்ச் சங்கத்தார் சென்ற வாண்டிற்போலவே தம் பத்திரிகையினை அன்புடன் அனுப்பிவருகின்றனர்.

எமதுநோக்கம்.

சங்கத்தின் நோக்கங்களை முற்றுறச்செய்ய யாம் துணிந்த பலவழிகளுள் கீழ்க்குறித்தவை நன்கு நோக்கத்தக்கன.

க. செந்தமிழ்க் கைத்தொழிற் கலாசாலை.

இத்தகைய கலாசாலை தமிழினது வளர்ச்சிக்கும், தமிழரின் மேம்பாட்டுக்கும் எவ்வளவு உதவி செய்ய வல்லதென்பதை நமது இரண்டாவது ஆண்டு நிறைவு அறிக்கைப்பத்திரத்தில் எழுதி வெளியிட்டிருக்கிறோம். இக்கலாசாலையினை மிக விரைவில் தாபித்து நடத்தவேண்டுமென்பது முடிந்தநோக்கமாயினும், அதற்குவேண்டும் ஊதியம், கட்டிடமாதிய

பிறவுபகரணங்களும் இன்னும் கிட்டாமையானும், யாம் ஏற்றுக்கொண்ட பிறசிலதமிழ்த்தொண்டுகளில் எமது உழைப்பெல்லாம் செல்லவேண்டியிருப்பதானும், இவ்வரும் பணியினை இன்னும் நிறைவேற்றவியலாமைக்குப்பெரிதும் இரங்குகிறோம். இக்குறையினைக்கூடிய விரையில் !முடித்துவைக்கும் கடப்பாடு எமது நிருவாக சபையினருக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

## உ. தமிழமாணவர் விடுதி.

திருச்சி, சென்னையாதிய பெரும் பட்டணங்களில் வேற்றூரினின்றும் போந்து ஆங்கிலக்கலாசாலைகளில் பயிலும் தமிழமாணவர் அனுபவிக்கும் கஷ்ட நஷ்டங்கள் மிகப்பலவாம். கல்விக்கருந்தனம் தேடப்புக்க நம்சிறூர்க்கு உண்டுடுப்பதில் இடுக்கண் ஏற்படாது அவர்களுக்குத் தக்க சௌகரியங்கள் அமைத்துக்கொடுப்பதும், பெற்றோரைவிட்டுப் பிற ஊரில் தங்கும் நம் இளைஞர்கள் நற்பழக்கங்கள் பெறச்செய்வதும், நம் அருந்தமிழ்த்தாயிடத்துத் தங் கடப்பாடோர்ந்து அன்னாட் கரும்பணித்தொண்டு பூண்டொழுகுமாறு பயிற்றுவிப்பதும் எத்துணை அத்தியாவசியமென்பது மலையிலக்காம். இப்பெருங் காரியங்களைக்குறித்து ஆனந்தஸூ ஐப்பசிமீ 9௳ யன்று கூடிய சர்வ அங்கத்தினர் பொதுக்கூட்டத்தில் 'திருச்சியில் மாணவர் விடுதியொன்று ஏற்படுத்

தி நடத்துகிறதென்றும், அதற்கான காரியங்களைத் திருச்சிக் கிளைச்சங்கத்தார் செய்யவேண்டியதென்றும் தீர்மானிக்கப்பட்டது.' திருச்சிக் கிளைச்சங்கத்தினர் இவ்வரும் பொறுப்பினை அன்புடன் ஏற்றுத் தமது முயற்சிவழியிற்றோன்றிய அளவில்லா இடர்ப்பாட்டினைப் பொருட்படுத்தாது பேரூக்கத்தோடு உழைத்துத் தண்டமிழ்த் தொண்டில் தலைசிறந்து விளங்குவது அருந்தமிழ்ச் சீரியர் பலர்க்கும் உள்ளம் திளைக்கும் உவகை பயப்பதாம்.

## ௩. பத்திரிகை.

நம் நோக்கங்களைத் தமிழ்ப் பேருலகினர்க்கு நன்கு தெளிவித்து, அன்னார் உதவிபெற்று அவற்றினை நிறைவேற்றுமாறு காண்டலும், தமிழ் மக்களையும், அவர் தெய்வத் திருமொழியினையும் இழிதகவு செய்து, உண்மைச் சரிதநெறி பிறழ எழுதி வரும் விஷயங்களை நியாய நெறியிற் கண்டித்தலும், மேல் நாட்டுச் சாத்திரங்களைத் தமிழில் மொழிபெயர்த்தமைத்துக் கொள்ளுதலுமாகிய இன்னோரன்ன நோக்கங்களோடு நம்சங்கத்தினின்றும் ஓர் சிறந்த தமிழ்ப் பத்திரிகை வெளியிடுவதற்கான ஏற்பாடுகள் செய்யும்படி கனம் நா. சீதாராமபிள்ளை அவர்கள், கனம் V. பெரியசாமி பிள்ளை அவர்கள், கனம் ஐ. குமரசாமி பிள்ளை அவர்கள், B. A., கனம் த. பீ. சோமநாத ராவ் அவர்கள், கனம் வே. இராதாகிருஷ்ண பிள்ளை அவர்கள்

B.A. ஆகிய இவ்வைவர் கூடிய ஓர் அவையமைக்கப்பட்டது. இக்கழகத்தினர் இது விஷயமாக அரசாங்கத்தினரின் அனுமதிபெறவேண்டிமுயன்று வருகின்றனர். பத்திரிகைத் தாபகத்திற்கு மூலதனமாகக் கீழ்க்கண்ட கனவான்கள் ஒவ்வொருவரும் ரூ. 15 உதவியிருக்கின்றனர்:—

கனம் த. பீ. சோமநாத ராவ் அவர்கள்.
,, V. பெரியசாமி பிள்ளை ,,
,, E. R. நடேச பிள்ளை ,,

இப்பெரியாரைப் போன்று பலர் முன் வந்துதவி இவ்வழியில் எம்முயற்சி பயன் பெறச் செய்வார்களென்று நம்புகிறோம்.

## ச. தமிழ்ப் பரீட்சைகள்.

நம் சங்கத்து அங்கத்தினர்களின் தமிழ்ப்பாஷா ஞானத்தைச்சிறக்கச்செய்யச்சிறந்த பாடங்களை வகுத்து, தக்க விற்பன்னர்களைக்கொண்டு, அவர்களைப் பரிசோதிப்பிப்பதென்றும், அப்பரிசோதனையில் நன்கு தேருபவர்களுக்கு பரிசு முதலியன கொடுப்பதென்றும் தீர்மானித்து இவ்வேலை நிருவாக சபையினர்க்குக் கொடுக்கப்பெற்றிருக்கிறது. இன்னும் சின்னளில் இவ்வழியில் மிகப்பிரயோசனம் பெறலாமென நம்புகிறோம்.

இனி, நம் பண்டைத்தமிழகத்தே நிலவிய அரும் பெருங்கைத்தொழில்களும், வியாபாரமுறைகளும் இப்பொழுது இறந்து பட்டனவாக, அவைகளில் நம் நாட்டினர் விழைவு பூண்டு சிறந்த கணக்கு முறைகளைக் கடைப்பிடித்துத் தம் புராதனப் பெருமையுறச்செய்தல் கருதி, கணக்குப்பதிவு சாத்திரத்தில் ஓர் பரீட்சை ஏற்படுத்தி நடத்துவதாக உத்தேசித்து, 'சுதேசமித்திரன்' பத்திரிகை வாயிலாக இவ்விஷயத்தை விளம்பரப்படுத்தியிருக்கிறோம். இம்முயற்சியில் எங்களுக்குப் பலவாறு உதவி செய்ததன்றி, பரீட்சையில்முதன்மையில்தேருபவர்க்கு ஓர் பொற்பதக்கம் பரிசளிப்பதாக ஒப்புக்கொண்டிருக்கும் ஸ்ரீமான் K. நடேசையர் அவர்களுக்கும், இரண்டாவதாகத்தேருபவர்க்கு ஓர் வெள்ளிப்பதக்கம் பரிசளிப்பதாக ஒப்புக்கொண்ட ஸ்ரீமான் K. குப்புசாமி பிள்ளை அவர்களுக்கும் இச்சங்கத்தார் மிகவும் நன்றியுள்ளவர்களாயிருக்கிறார்கள்.

கிளைச்சபை.

திருச்சியில் தாபித்துள்ள நமது கிளைச்சபை பிறைமதிபோல் நாளும் வளர்ந்து வருகின்றது. இது நமது சங்க நோக்கங்களை நன்குபரவுவிப்பதன்றிப் பணவுதவியானும், ஏனைப்பிறவழிகளானும் உதவி வருவதற்கு யாம் அச்சபையினர்க்கு மிகவும் கடமை வாய்ந்துள்ளோம். இக்கிளையின் அறிக்கைப்பத்திரம்

இத்துடன் மூன்றாவது அனுபந்தமாகச் சேர்க்கப் பட்டிருக்கிறது.

வருவாய்.

வழக்கம்போலவே நம் சங்கத்தின் வரும்படியிற் பெரும்பாகம் அங்கத்தினரிடமிருந்தே வந்ததாகும். நம்மொழியும் நம் சகோதரரும் பல்வழியிலும் ஏற்றமுற அரிதினும் அரிது முயன்று உழைத்துவரும் நம் சங்கம் அருந்தமிழ் மக்களின் வள்ளன்மைக்குப் பெரிதும் பாத்திரமாயதெனினும், எமக்கு ஏற்றவாறு உதவிபுரிந்து எம்மை ஊக்கினூர் மிகச் சிலராம். சென்றவாண்டிற்போலவே இவ்வாண்டும் எமதங்கத்தினர் தமதில்லத்தில் சுபசோபனுதிச்சடங்குகள் நிகழுங்காலங்களில் அருந்தமிழன்னையினை மறவாது அன்னாள் கைங்கரியத்திற்குத் தம்மாலியன்றன உதவி வந்தது கேட்டுத்தமிழுலகு மிகக்கொண்டாட வல்லது. இவ்வருங்கடப்பாடு செலுத்தியார் விவரம் பின்வருமாறு காண்க:—

கனம் மு. பொன்னுச்சாமி பிள்ளை அவர்கள் ரூ. 8 கலியாணம்.

„ R. கிருஷ்ணசாமி பிள்ளை அவர்கள் ரூ. 10. கலியாணம்.

„ S. A. சாம்பசிவம் பிள்ளை அவர்கள் ரூ. 16-8-0 கலியாணம்.

கனம் R. திருஞானம் பிள்ளை அவர்கள் ரூ. 3–15–2
கலியாணம்.

,, இ. ரா. சிவகடாட்சம்பிள்ளை அவர்கள் ரூ. 25
கலியாணம்.

,, தே. வையாபுரி உடையார் அவர்கள் ரூ. 10
கிரகப்பிரவேசம்.

,, அ. நாராயணசாமி பிள்ளை அவர்கள் ரூ. 0-4-0
தந்தையார் திவசம்.

இடம்.

சங்கத்திற்கெனச் சொந்தவிடமில்லாக் குறை இன்னும் நீங்கினபாடில்லை. யாம் சென்றவாண்டில் தெரிவித்துக்கொண்டபடி நமது ஆதரிப்பாளருள் ஒருவராகிய ஸ்ரீமான் சா. ராம. மு. சித. பெத்தாச்சி செட்டியார் அவர்கள் இப்பெருங்குறையினைத் தீர்த்து வைப்பதாக மிக்க அன்புடன் வாக்களித்திருக்கிறார்கள். ஆயினும் இன்னும் இவ்வசதிகள் கைகூடாமையின் சங்கத்தின் வேலைகள் மிகவும் இடர்ப்படுகின்றன. நமது ஆதரிப்பாளரவர்களுடைய உதவியால் சீக்கிரம் இக்குறையினை முடிக்கலாமென்று நம்புகிறோம்.

இரங்கல்.

நம தருந்தமிழன்னையார்பால் மிக்க ஆதரம் பூண்டு பல்வழியிலும் அன்னாள் தொண்டாற்று ஈடு

பட்டு நடந்த திருச்சி தாசில்தார் ஸ்ரீமான் தி. ச. அண்ணுமலைப்பிள்ளை அவர்களும், பண்டைத்தமிழ்க் கடலைப்பருகியடக்கி மகாவித்துவசிரோமணியாய்த் திகழ்ந்த சோழவந்தானூர் ஸ்ரீமான் அரசஞ்சண்முகனார் அவர்களும் காலஞ்சென்றமைக்கு மிகவும் இரங்கிப் பரிதபிக்கின்றோம்.

வாழ்த்து.

யாம் இதுகாறும் கூறிப்போந்த நம் சங்கத்தின் முயற்சிகளும், உழைப்பும் பிறக்கக்காரணமாயிருந்தார் பலர். வழக்கம்போலவே எம்பால்பேரருள் காட்டி வந்ததன்றி, சென்றவாண்டுநிறைவுவிழாச் செலவுக்காக நூறு ரூபாய்வரை உதவியும், இனி ஒவ்வொரு வருடத்திருவிழாவுக்கும் இத்தொகை உதவுவதாக வலிய வாக்களித்துமுள்ள ஆண்டிப்பட்டி ஜமீன்தார் ஸ்ரீமான் சா. ராம. மு. சித. பெத்தாச்சி செட்டியார் M. R. A. S. அவர்களும்; தமது ஆதரணைப் பெருமையினை யாம் வகிக்குமாறு அருள் காட்டியுதவும் ஸ்ரீமான் வா. கோபாலசாமி இரகுநாத இராசாளியார் F. T. S., O. S. E. அவர்களுமாய் எமது ஆதரிப்பாளர்களுக்கு எம்முடைய அன்பார்ந்த வந்தனத்தைச் செலுத்துகின்றோம். யாம் சென்ற மூன்றாவதாண்டுத் திருவிழா நடத்திய விஷயத்தில் எமக்குப் பல்வழியினும் பேருதவி புரிந்தார் ஸ்ரீமான் கா. நமசிவாய முதலியார் அவர்கள், சென்னைக் காக்ஸ்

டன் அச்சியந்திரசாலைத்தலைவர் சீமான் கன்னையா நாயுடு அவர்கள், சீமான் சிவஞானம் பிள்ளை அவர்களாதியோர். இப்பேரருளாளர்க்கு எம் நன்றி என்றும் உரித்தாகும். இன்னும் எமக்குவேண்டும்போது இடவசதி முதலிய அமைத்துதவிவரும் சீமான் வீ. அப்பாசாமி வாண்டையா ரவர்கட்கும், ஸ்ரீ கந்தப்பச் செட்டியார் சத்திரத்திற்குரியார்க்கும் யாம் கடப்பாடு பூண்டொழுகுதல் வாய்ந்துள்ளேம்.

எம்முடன் ஓர் அங்கத்தினராயமர்ந்து பல்காலும் வருந்தியுழைத்து வரும் எமதரிய தலைவா கனம் த. வே. உமாமஹேஸ்வரம் பிள்ளை B. A., B. L. அவர்களை எங்களுடன் ஒருவராகக் கணிப்பதன்றி அவர்களுக்கு வந்தனம் புரிவது மிகையாகும். இவர்களைப் போலவே சங்க காரியங்களில் விடாது பாடுபட்டு வரும் வக்கீல் கனம் ஐ. குமரசாமி பிள்ளை அவர்கள், B. A., கனம் நா. சீதாராம பிள்ளை அவர்கள், வக்கீல் கனம் M. S. கல்யாணசுந்தரம் ஐயர் அவர்கள், காசுக்கடை கனம் த. பீ. சோமநாதராவ் அவர்கள், திருச்சி கனம் T. N. குருமூர்த்தி பிள்ளை அவர்கள் முதலிய பலருக்கும் எங்கள் உழுவலன்பினைத் தெரிவித்துக்கொள்ளுகிறேம். சுபம்.

கரந்தைத் தமிழ்ச்சங்கம்,
தஞ்சை,
இராக்கதஹூ ஆனிமீ.

R. வேங்கடாசலம்,
காரியதரிசி.

# அனுபந்தம் க.

---

## கரந்தைத்தமிழ்ச்சங்கம்,
## தஞ்சை.

---

### ஆதரிப்பாளர்.

---

ஸ்ரீமான் வா. கோபாலசாமி இரகுநாத
இராசாளியார் அவர்கள், F. T. S., O. S. E.

ஸ்ரீமான் சா. ராம. மு. சித. பெத்தாச்சி செட்டியார் அவர்கள்,
M. R. A. S., ஆண்டிப்பட்டி ஜமீன்தார்.

---

### சங்கத்தலைவர்.

---

ஸ்ரீமான் த. வே. உமாமஹேஸ்வரம் பிள்ளை அவர்கள்,
B. A., B. L.

---

### காரியதரிசி.

---

ஸ்ரீமான் R. வேங்கடாசலம் பிள்ளை அவர்கள்.

---

## பொருளாளர்.

---

**ஸ்ரீமான் ஆ. ச. ஆறுமுகம் பிள்ளை அவர்கள்.**

---

## கணக்குப் பரிசோதகர்.

---

**ஸ்ரீமான் பா. கல்யாணசுந்தரம் பிள்ளை அவர்கள்.**

---

## நிருவாகசபையார்.

---

க ஸ்ரீமான் த. வே. உமாமஹேஸ்வரம் பிள்ளை அவர்கள், B. A., B. L.
உ ,, R. வேங்கடாசலம் பிள்ளை அவர்கள்.
ந ,, ஆ. ச. ஆறுமுகம் பிள்ளை ,,
ச ,, ஐ. குமரசாமி பிள்ளை ,, B. A.
ரு ,, சி. தக்ஷிணாமூர்த்திப் பிள்ளை ,,
சா ,, த. பீ. சோமநாதராவ் ,,
எ ,, நா. சீதாராம பிள்ளை ,,

---

## அங்கத்தினர்.

---

க † ஸ்ரீமான் த. வே. உமாமஹேஸ்வரம் பிள்ளை அவர்கள், B. A., B. L.
உ† ,, R. வேங்கடாசலம் பிள்ளை ,,
ந† * ,, அ. கணபதி பிள்ளை ,,

| | | | | |
|---|---|---|---|---|
| ச † | ஸ்ரீமான் | வே. இராதாகிருஷ்ண பிள்ளை | அவர்கள், | B. A. |
| ரு † | ,, | சி. தக்ஷிணாமூர்த்திப் பிள்ளை | ,, | |
| சு † | ,, | R. கோவிந்தசாமி பிள்ளை | ,, | |
| எ † | ,, | R. கிருஷ்ணசாமி பிள்ளை | ,, | |
| அ * | ,, | T. N. குருமூர்த்தி பிள்ளை | ,, | |
| கூ † | ,, | பா. கல்யாணசுந்தரம் பிள்ளை | ,, | |
| ௰ † | ,, | V. கோவிந்தசாமி நாயுடு | ,, | |
| கக † | ,, | ஆ. ச. ஆறுமுகம் பிள்ளை | ,, | |
| கஉ † | ,, | லோ. சோக்கலிங்கம் பிள்ளை | ,, | |
| கங † | ,, | பொ. சுப்பிரமணிய பிள்ளை | ,, | |
| கச † * | ,, | கோ. கோபாலகிருஷ்ண பிள்ளை | ,, | |
| கரு † * | ,, | நா. துரைசாமி பிள்ளை | ,, | |
| கசு | ,, | பக்கீர்முகம்மது சாஹிப் | ,, | |
| கஎ † * | ,, | E. R. நடேசம் பிள்ளை | ,, | |
| கஅ † * | ,, | கோவிந்தராஜன் | ,, | |
| ககூ † | ,, | மு. பாலகிருஷ்ண பிள்ளை | ,, | |
| உ௰ † | ,, | வீ. சு. சிதம்பரம் பிள்ளை | ,, | |
| உக † | ,, | சா. நடேசம் பிள்ளை | ,, | |
| உஉ | ,, | சி. சிவராமகிருஷ்ண பிள்ளை | ,, | |
| உங † | ,, | ஐ. குமாரசாமி பிள்ளை | ,, | B. A. |
| உச † * | ,, | உ. நா. அப்பாசாமி ஐயர் | ,, | |
| உரு * | ,, | தி. முனிசாமி முதலியார் | ,, | |
| உசு | ,, | அ. சுப்பையா பிள்ளை | ,, | |
| உஎ † | ,, | ச. சண்முகம் பிள்ளை | ,, | |
| உஅ * | ,, | அ. பாலசுப்பிரமணிய பிள்ளை | ,, | |
| உகூ * | ,, | தி. பொ. இராமலிங்கம் பிள்ளை | ,, | |
| ங௰ † * | ,, | அ. சுந்தரேசம் பிள்ளை | ,, | |
| ஙக † | ,, | A. இராமசாமி பிள்ளை | ,, | |
| ஙஉ | ,, | ம. தா. மதார் சாஹிப் | ,, | |

நக ஸ்ரீமான் ஆ. மாணிக்கஞ் செட்டியார் அவர்கள்.
நச ,, வை. அரங்கசாமி பிள்ளை ,,
நரு† ,, அ. திருவேங்கடஞ் செட்டியார் ,,
நசு ,, த. அ. நாராயணசாமி பிள்ளை ,,
நஎ * ,, N. சுப்பிரமணிய பிள்ளை ,,
நஅ† * ,, மு. பொன்னுச்சாமி பிள்ளை ,,
நகூ ,, து. சுந்தரேசம் பிள்ளை ,,
சய * ,, T. A. சம்பந்தம் பிள்ளை ,,
சக ,, E R. பொன்னுச்சாமி பிள்ளை ,,
சஉ ,, K. சோமசுந்தரம் பிள்ளை ,,
சந ,, R. பெரியசாமி சேர்வை ,,
சச ,, மா. சிங்காரவேலுப் பிள்ளை ,,
சரு * ,, மு. அருணசலம் பிள்ளை ,,
சசு ,, ச. அ. சாம்பசிவம் பிள்ளை ,,
சஎ ,, த. பீ. சோமநாத ராவ் ,,
சஅ ,, D. கந்தசாமி பிள்ளை ,,
சகூ ,, J. நடேச பிள்ளை ,,
ருய ,, கோ. வேங்கடாசலம் பிள்ளை ,,
ருக ,, அ. சதாசிவம் பிள்ளை ,,
ருஉ ,, ச. சந்திரசேகரம் பிள்ளை ,,
ருந ,, D. இரத்தினம் பிள்ளை ,,
ருச ,, T. M. இராம்தாஸ் ராவ் மாடிக் ,,
ருரு† ,, V. பிச்சைமுத்து முதலியார் ,,
ருசு† ,, நா. சீதாராம பிள்ளை ,,
ருஎ† ,, அ. ஜகராயப் பிள்ளை ,, B. A., B. L.
ருஅ ,, அ. அனந்தவிஜய முதலியார் ,,
ருகூ† ,, ஆ. முத்துக்குமாரசாமி பிள்ளை ,, B. A.
சுய ,, R. திருஞானம் பிள்ளை ,,
சுக ,, கோ. சுப்பிரமணிய பிள்ளை ,,

| | | | |
|---|---|---|---|
| ௬௨ | ஸ்ரீமான் | சொ. முத்தையா பிள்ளை | அவர்கள். |
| ௬௩ | ,, | க. சாமிநாத பிள்ளை | ,, |
| ௬௪ | ,, | வே. கந்தசாமிச் சேர்வைகாரர் | ,, |
| ௬௫ | ,, | மு. அண்ணுசாமி நாயுடு | ,, |
| ௬௬ | ,, | கு. பேச்சுமுத்துப் பிள்ளை | ,, |
| ௬௭ | ,, | மு. இரத்தினசபாபதி பிள்ளை | ,, |
| ௬௮ | ,, | அ. பாலசுப்பிரமணிய பிள்ளை | ,, |
| ௬௯ | ,, | வீ. நாராயணசாமி பிள்ளை | ,, |
| ௭௰ † | ,, | த. கி. அருணசலம் பிள்ளை | ,, |
| ௭௧ † | ,, | V. பெரியசாமி பிள்ளை | ,, |
| ௭௨ | ,, | ம. சாமிக்குச்சிராயர் | ,, |
| ௭௩ | ,, | பொ. சொக்கலிங்கம் பிள்ளை | ,, |
| ௭௪ | ,, | சி. சாமியையாத் தேவர் | ,, |
| ௭௫ | ,, | S. கோவிந்தசாமிச்செட்டியார் | ,, |
| ௭௬ † * | ,, | க. மதுரைநாயகம் பிள்ளை | ,, |
| ௭௭ † * | ,, | ச. கோபால பிள்ளை | ,, |
| ௭௮ * | ,, | R. ஸ்ரீராமுலு செட்டியார் | ,, |
| ௭௯ † | ,, | ம. உலகநாத பிள்ளை | ,, |
| ௮௰ † | ,, | M. S. கல்யாணசுந்தரமையர் | ,, |
| ௮௧ | ,, | நா. கோதண்டபாணிப்பிள்ளை | ,, |
| ௮௨ | ,, | அ. சாமிராவ் | ,, |
| ௮௩ † * | ,, | அ. மதுரைநாயகம் பிள்ளை | ,, |
| ௮௪ † | ,, | D. பாராங்குச நாயுடு | ,, |
| ௮௫ | ,, | க. சாமிநாத பிள்ளை | ,, |
| ௮௬ | ,, | மு. நாராயணசாமி நாயுடு | ,, |
| ௮௭ | ,, | அ. சுப்பராயலு நாயுடு | ,, |
| ௮௮ | ,, | T. B. தாஸ் ராவ் | ,, |
| ௮௯ † | ,, | S. இராஜகோபால பிள்ளை | ,, |
| ௯௰ † | ,, | T. இராஜாராம் ராவ் | ,, |

| | | | |
|---|---|---|---|
| கக | ஸ்ரீமான் | க. முத்தையா செட்டியார் | அவர்கள் |
| கஉ† | ,, | க. சண்முகம் பிள்ளை | ,, B. A., B. L. |
| கங† | ,, | T. V. சையத்மியான் சாஹீப் | ,, |
| கச | ,, | அல்லிமுத்துப் பிள்ளை | ,, |
| கரு† | ,, | மா. வே. கோபாலகிருஷ்ண ஐயர் | ,, |
| கசு | ,, | T. R. விசுவநாத பிள்ளை | ,, |
| கஎ† | ,, | ஆ. சி. கங்காதர முதலியார் | ,, |
| கஅ† | ,, | ம. நடராஜ பிள்ளை | ,, B. A., B. L. |
| கக | ,, | ச. சி. பஞ்சநதம் பிள்ளை | ,, |
| ௨0 | ,, | தி. சுப்புப் பிள்ளை | ,, |
| ௨க | ,, | வெ. இராமச்சந்திர ராவ் | ,, |
| ௨உ§ | ,, | உ. அ. இரகுநாதாசாரியார் | ,, |

† புத்தகசாலைக்கும் அங்கத்தினர். * திருச்சிக்கிளை அங்கத்தினர்.
§ புத்தகசாலைக்கே அங்கத்தினர்.

---

## அனுபந்தம் உ.

---

## கரந்தைத்தமிழ்ச்சங்கம்
## தஞ்சை.

---

### ஆனந்த—இராக்கத வருடத்தில் புத்தகங்கள் உதவியவர்களின் விவரம்.

---

| | | | பிரதிகள். |
|---|---|---|---|
| க | கனம். | வீ. சுப்பராய பிள்ளை அவர்கள் | 73 |
| உ | ,, | மதுரைத்தமிழ்ச்சங்கம் | 26 |
| ௩. | ,, | அ. சதாசிவம் பிள்ளை அவர்கள் | 21 |
| ச | ,, | T. இராஜாராம் திவாரி அவர்கள் | 12 |

| | | | பிரதிகள். |
|---|---|---|---|
| ரு | கணம் | ச. அ. சாம்பசிவம் பிள்ளை அவர்கள் | 7 |
| சு | ,, | T. S. D. சாமி அவர்கள் | 7 |
| எ | ,, | T. N. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் | 6 |
| அ | ,, | அ. சிதம்பரம் பிள்ளை அவர்கள் | 4 |
| கூ | ,, | V. A. ஜகராயப்பிள்ளை அவர்கள் | 4 |
| ய | ,, | சைவசபை, பாளையங்கோட்டை | 2 |
| கக | ,, | T. இராமகிருஷ்ண பிள்ளை அவர்கள் | 2 |
| கஉ | ,, | P. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் | 2 |
| கங | ,, | வேதபோதகம் பிள்ளை அவர்கள் | 1 |
| கச | ,, | ஆ. சேதுராமபாரதியார் அவர்கள் | 1 |
| கரு | ,, | ஈசுரமூர்த்தியா பிள்ளை அவர்கள் | 1 |
| கசு | ,, | D. K. சுப்பையா நாயுடு அவர்கள் | 1 |
| கஎ | ,, | அ. கணபதி பிள்ளை அவர்கள் | 1 |
| கஅ | ,, | S. தக்ஷிணாமூர்த்திப்பிள்ளை அவர்கள் | 1 |
| ககூ | ,, | ஆ. சபாபதி பிள்ளை அவர்கள் | 1 |
| உய | ,, | ம. உலகநாத பிள்ளை அவர்கள் | 1 |
| உக | ,, | I. சாமிநாத முதலியார் அவர்கள் | 1 |
| உஉ | ,, | மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் | 1 |
| | | ஆக மொத்தம் | 176 |

---

## அநுபந்தம் ங.

---

## கரந்தைத்தமிழ்ச்சங்கம், தஞ்சை.

---

### திரிசிரபுரம் கிளை.

---

திருவளர் செல்வத் திருச்சியிலிக்கிளை பிரமாதீசஞு

கார்த்திகைமீ கஉ நிறுவப்பெற்று, ஆனந்தஸு சித்திரைமாதத்தொடு ஆறுமாதம் நிரம்பியதாக, இக்காலத்து நிகழ்ச்சி விவரங்களைத்தனியே எழுதி, கிளை வருடத்தையும் தாயவை ஆண்டொடு ஒற்றுமைப்படுத்தினேன். இனி, ஆனந்தஸு வைகாசிமீ கஉயிற்றொடங்கி இராக்கதஸு சித்திரைமீ ௩௰உயில் நிறைந்த ஓராட்டை நிகழ்ச்சிகளை ஈண்டு விவரிக்கின்றேன்.

க. உறுப்பினர்.

இவ்வருட ஆரம்பத்தில் அங்கத்தினராய்அமர்ந்திருந்தார் பதினெழுவர். இவரில் இடையே நீங்கினர் ஒருவர்; உத்தியோக நிமித்தம் வேற்றூருக்கு மாற்றப்பெற்றாரொருவர். எஞ்சியபதினைவரொடு, நாளடைவில் நால்வர் கூடினராக, வருடக்கடைசியிற் றொக்கார் பத்தொன்பதின்மர்.

உ. கூட்டங்கள்.

இவ்வாண்டில் முப்பது கூட்டங்கள் நடைபெற்றன. இவற்றுள் அங்கத்தினர் கனம் இ. ரா. நடேசபிள்ளையவர்கள் இல்லத்தில் இருபது கூட்டங்களும், மலைக்கோட்டை ஐயனர் கோயிற் சபாமண்டபத்தில் பத்துக்கூட்டங்களும் நடந்தன. இக்கூட்டங்களின் இயல்பு பன்முறையும் மாறுவதாயிற்று. முதலிலேற்பட்ட முறைப்படி எட்டு நாட்களிற் பிரசங்கங்களும் ஐந்து நாட்களிற் பாடமோதலும் நிகழ்ந்தன. பின்னர்த் தாய்ச்சங்கத்தில் ஏற்படுத்தியிருக்கும் பரீட்சைகளுக்கு அங்கத்தினர் கல்வி பயிலுதல் கருதி, தலைவரவர்கள் அனுமதிபெற்று, இவ்வூர் எஸ். பி. ஜி. கலாசாலைப் பண்டிதர் கனம் ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்களை ஆசிரியராகக்கொள்ள, அவர்கள் கம்பராமாயணமும், நன்னூலும் பயிற்றி வருகிறார்கள். இங்ஙனம் நன்னூல் பயின்ற நாட்கள் ஏழில், எழுத்ததிகாரத்தில், எழுத்

தியலும் பதவியலும் முடிந்தன. இருபத்தொரு நாட்களில் கம்பராமாயணத்தில் முதலிலிருந்து மதிலைக்காட்சிப்படலத்தில் 63ம் செய்யுள்வரை நடந்துளது. எனவே நாளொன்றுக்கு நடந்த செய்யுட்டொகை சராசரி 30. சபைகூடிய சங்கத்தினர் தொகை சராசரி 6. சென்ற வாண்டின்றொகையோடு இத்தொகையை ஒப்பு நோக்குங்கால், அங்கத்தினர் தமக்கு ஏற்படும் சௌகரியங்களைப் பயன்படுத்திக்கொள்ள ஆவலுடையராயிருந்தார்களெனக்கொள்ளுதற்கியலாது.

## ௩. வருவாய்.

இக்கிளை மூலமாய் இவ்வருட வருவாய் விவரம் கீழே காட்டியவாறு:—

| | | |
|---|---|---|
| மாதச்சந்தா | ரூ. | 44—0—0 |
| புத்தகசாலைச்சந்தா | ரூ. | 6—0—0 |
| நன்கொடை | ரூ. | 76—5—0 |
| புத்தகம் விற்றுமுதல் | ரூ. | 0—8—0 |
| மொத்தம் | ரூ. | 126—13—0 |

செலவொன்றுமில்லை.

## ௪. மாணவர்விடுதி.

ஆங்கிலக் கல்விப் பயிற்சி காரணமாகப் பிறவூர்களிலிருந்து இவ்வூரில் வந்து வதிதரும் தமிழப்பிள்ளைகள், இடவசதிக்குறைவு, நல்லுணவின்மை முதலிய அசௌகரியங்களிற் பெரிதும் வருத்தமுறுகையினாலே, அதனை நிவர்த்திக்கவேண்டுமெனப் பலரும் வேண்டியவாறே, திருச்சியில் மாணவர்க்கு உணவுவிடுதி ஒன்று ஏற்படுத்தி நடத்துகிறதென்றும், அதற்

கான காரியங்களைத் திருச்சிக் கிளைச் சபையார் செய்கிறதென்றும், சங்கத்தார் தீர்மானித்ததைத் தலைவரவர்கள் 1914௵ அக்டோபர்மீ 26உயில் எனக்கறிவித்தார்கள். அவ்வறிக்கையை யேற்று, "முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும், படுபயனும் பார்த்துச் செயல்." என்பதற்கிணங்க ஈண்டுள்ள நண்பர் பலருடன் யானும் விஷயங்களை ஆராயலுற்றேன். உற்றேற்கு, சங்கங்கள் கூட்டுதலானும் பயன், தமிழகமானது பிற்காலத்தின் மேம்பாடுற்று நிலவுதலாமென்பதும், அதுதான் தமிழ்மக்கள் அறிவாற்றல்களிற் சிறந்தவராய வழியே சித்திப்பதாமென்பதும், இக்காலத்து மாணுக்கராயுள்ளவரே பிற்றைநாட் பெரியோராய்ச் சிறத்தற் குரியா ரென்பதும், அவ்வாற்ருனுரிய மாணவர்கள் கல்வி பயிலுங் காலத்தே தத்தம் யாக்கை யளவுக்கேற்ற நோய் செய்யாத நல்லுணவினை அன்புடன் உபசரித்தூட்டப் பெறுவாரைப் பெருராய், உண்மையன்பில்லாதார் இடும் உணுக்கடைகளில் உண்டு போதருதல், "மிகினுங் குறையினும் நோய்செய்யு மேலோர், வளிமுதலா வெண்ணிய மூன்று." என்ற பொய்யாமொழிக் கேற்ப அவர்களது உடல் வலியை இழக்கச் செய்தலோடு, அவர்கள் தொடங்கிய கருமங்களிற் செல்லும் மனவெழுச்சியையும் தடுத்து நிற்குமாகலான், அன்ஞர்க்கு அன்னதோ ரிடையூறு நேராமல் இயன்றவாறு பேணுதலும், ஒரு நிகராய தமிழ்மக்களுக்குள்ளே தாம் தாம் பெரியரெனச் செருக்கி ஒருமைப்பாடு சிதைந்து அவமுருவாறு அத்திறத்தார்க்குள் ஒருமைப்பாட்டினையும் அன்பினையும் வளரச்செய்து, அவர்கள் கற்கும் கல்வியை உள்ளவாறு "மம்மரறுக்கும் மருந்"தாகச் செய்தலும் இன்றியமையாத வென்பதும், எவ்வாற்ருனும் இதுபோற் செய்தக்க செயல் பிறிதில்லையென்பதும் ஆராய்ச்சியாற் கிடைக்கலுற்றன. இனித்தக்கதோர் இடவசதியும், முதற்பொருட் சேர்க்கையும் முடியின், இவ்விடுதி நாளது 1915௵ ஜூலைமீ 1உயில் ஆரம்பிக்கலாகும்

சங்கத்திற்குச் சிறிதும் இலாப நஷ்டமின்றி, மாணவர்க்குக் குறைந்த செலவில் நிறைந்த நன்மைபயத்தலின், இம்முயற்சி பொதுநலப்பிரியர் பலரானும் பெரிதும்மெச்சி விரும்பத்தக்கது.

ரு. வந்தனம்.

சபைகள் நடைபெறுதற்காக மனமகிழ்வுடன் இடந்தந்து பசரித்து, அதற்குவேண்டிய வசதிகளையும், செவ்வனேயமைத் துதவி, இவையில்லாக் குறையால் தாய்ச்சபைபோல யாமும் வருந்தாது காத்துவரும், அங்கத்தினர் கனம் இ. ரா. நடேசபிள்ளையவர்களுக்கும், ஐயனார் கோயிற்றரும கருத்தர் களுக்கும்; யாம் தமிழறிவாராய்ச்சிகளிற் சிறக்கவேண்டுமென மிகப்பரிந்து, தமக்குண்டாம் பல் திறத்த பிரயாசைகளையும் கரு தாது, எமக்கு உள்ளன்புடன் பாடம் சொல்லிவரும் பண்டிதர் கனம் ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்களுக்கும்; வழக்கம் போல் எமக்கு வேண்டிய புத்தகம், பத்திரிகை முதலியவை களையுதவி ஊக்கிவரும் தாயவையாருக்கும், தலைவரவர் கட்கும்; இக்கிளை யவையார் மிகுதியும் கடப்பாடு பூண்டொழு கும் கடமை யுடையார் என்பதை ஈண்டுக் குறிக்கின்றேன். அன்றியும், தாம் புதிதாக நிருமித்த கிரகப்பிரவேசத் திருநாளுக் கு, எமது வரவு வேண்டியும், அந்நன்னாளில் சங்கத்திற்கு ரூபா பத்து உபகரித்தும் மகிழ்ந்த கற்கண்டார் கோட்டைச் சீமான் தே. வையாபுரி உடையாரவர்கட்கும் எம் வந்தனங் கூறுகின்றோம். நன்று.

திரிசிரபுரம்,
இராக்கதஞு ஆனிமீ.

அ. கணபதி,
கிளைக்காரியதரிசி,

அனுபந்தம் ச.

# கரந்தைத்தமிழ்ச்சங்கம்.

## தஞ்சை.

ஆனந்த—இராக்கத வருடத்தில் வரவு செலவு விவரம்.

| வரவு. | தொகை. ரூ. | அ. | ப. | செலவு. | தொகை. ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|
| சென்ற வருடக்கடைசியில் பாக்கி ... ... | 206 | 2 | 5 | பொதுக்கூட்டச் செலவு ... ... ... ... | 6 | 10 | 9 |
| இவ்வருடத்தில் சந்தா— | | | | அச்சுக்கூலி ... ... ... .. ... | 53 | 15 | 6 |
| மாதச்சந்தா ரூ. 187-12—0 | | | | ஸ்டேஷனரி ... ... ... ... .. | 2 | 0 | 0 |
| புத்தகசாலைச் சந்தா ரூ. 30—8—0 | 218 | 4 | 0 | தபால், தந்தி ... ... ... ... | 3 | 5 | 3 |
| நன்கொடை ... ... ... | 261 | 11 | 2 | சங்கத்திற்குப் புத்தகம் வாங்கியது ... ... | 18 | 10 | 0 |
| புத்தகம் விற்றமுதல் ... ... ... ... | 4 | 2 | 6 | மூன்றாவது வருடோற்சவச் செலவு ... ... | 209 | 12 | 5 |
| மயிர்ச்சாந்து விற்றமுதல் ... ... ... ... | 1 | 0 | 0 | புத்தகங்கட்டுக் கூலி ... ... ... ... | 10 | 12 | 0 |
| சேமப்பொருட்கு வட்டி ... ... ... ... | 13 | 4 | 11 | சில்லரை ... ... ... ... .. | 0 | 4 | 0 |
| அனமத்து இருப்பு ... ... ... ... | 0 | 14 | 0 | | | | |
| | | | | மொத்தம் ... | 305 | 5 | 11 |
| | | | | பாக்கியிருப்பு.— | | | |
| | | | | சங்கத்தலைவர் வசம் ரூ. 216-11-11 | | | |
| | | | | பொருளாளர் வசம் ரூ. 183—5—2 | 400 | 1 | 1 |
| மொத்தம் ... | 705 | 7 | 0 | மொத்தம் ... | 705 | 7 | 0 |

தஞ்சை, கரந்தை.
இராக்கத ௵ ஆனிமீ ௧௨

R. வேங்கடாசலம்,
காரியதரிசி.

ஆ. ச. ஆறுமுகம் பிள்ளை,
பொருளாளர்.

பரிசோதனையிற் சரியெனக் காணலாயிற்று.

பா. கல்யாணசுந்தரம்,
கணக்குப்பரிசோதகர்.

# கரந்தைத்தமிழ்ச்சங்கம்

## தஞ்சை.

---

தமிழ் மொழியின் அபிவிருத்தி கருதியும், தமிழரது மேம்பாட்டை எண்ணியும், இச்சங்கம் விரோதி கிருது௵ வைகாசி௴ ௧௨ தாபிக்கப் பெற்றது. ஆலோசனை சபையிலுள்ள மாட்சிமிக்க இந்தியா கவர்னர் ஜனரல் அவர்களது பாஷை, சாத்திர சம்பந்தமான சபைகளைப் பதிவு செய்வதற்கான 1860-ம் வருடத்திய 21-வது சட்டப்படி இச்சங்கம் பதிவு செய்யப்பட்டுமுளது. தமிழ் மொழியன்பும், தமிழ்நன்மக்களிடத் தார்வமும் கொண்டுள்ள அருந் தமிழன்பர் யாவரும் இச்சங்கத்தின் அங்கத்தினராகும்படி கேட்டுக் கொள்ளப்பெறுகிறார்கள்.

R. வேங்கடாசலம்,

காரியதரிசி.

---

## CERTIFICATE OF INCORPORATION.

No. 1 of 1914—15.

---

I hereby certify, pursuant to Act XXI of 1860 of the Governor-General of India in Council entitled 'An Act for the Registration of Literary, Scientific and Charitable Societies, 1860', that the **'Karanthai Tamil Sangam'** Tanjore is duly incorporated as a Society under the aforesaid Act.

Office of the Assistant Registrar of Joint Stock Companies, Tanjore, dated 1st May, 1914.

R. CHAKRAPANI ROW,
*Assistant Registrar of Joint Stock Companies.*

---

# தமிழ்.

---

சங்கநிதி பதுமநிதி
யிரண்டுந் தந்து
தரணியோடு வானாளத்
தருவ ரேனும்
மங்குவார் அவர்செல்வம்
மதிப்போம் அல்லேம்
மாதமிழுக் கேகாந்தர்
அல்ல ராகில்
அங்கமெலாம் குறைந்தழுகு
தொழுநோ யராய்
ஆவுரித்துத் தின்றுழலும்
புலைய ரேனும்
தங்குபுகழ்ச் செந்தமிழ்க்கோர்
அன்ப ராகில்
அவர்கண்டீர் யாம்வணங்குங்
கடவு ளாரே.

---